# 8000 கற்கள்

ஒரு  சீன நாட்டுப்புற கதை

டையான் ஒக்ஸ்டீன்

தமிழில் கிருஷ்ணன்



# 8000 கற்கள்

## ஒரு சீன நாட்டுப்புற கதை

A Chinese Folktale





முன்னொரு காலத்தில் சீனாவில் ஒரு ராஜா இருந்தானாம்.
அவன் மொத்த சீனாவிற்குமே ராஜாதி ராஜனாம்.
அவன் பெயர் தான் “சாவோ சாவோ”.

லோயாங் எனும் அழகிய நகரை சாவோ சாவோ ஆண்டு வந்தான். அவன் ஒரு அழகிய தோட்டத்தின் நடுவில் உள்ள ஒரு பிரமாண்டமான மாளிகையில் வாழ்ந்து வந்தானாம்.



நகரத்தின் மற்றும் அரண்மனையின் சொத்துக்களை பத்தாயிரம் காவலாளிகள் கொண்ட படை காத்து வந்தது. இதை கேள்விப்பட்ட அண்டை நாட்டு ராஜாக்கள் அந்த பெருநகரத்திற்கு வந்து அதன் அழகை கண்டு ரசித்தனர் அல்லது தூதர்களை அனுப்பி அதை பற்றி தெரிந்து கொண்டனர்.



இப்படி வரும் தூதர்கள் ஏதேனும் அறிதான பொருட்களை பரிசாக ராஜாவுக்கு கொண்டு வருவார்கள்.இந்த வருடம் இந்தியாவிலிருந்து ஒரு இளவரசன் சாவோ சாவோக்கு ஒரு வித்தியாசாமான பரிசை அனுப்பி வைத்திருந்தான்.
இப்படிப்பட்ட பரிசை ராஜாவோ அல்லது அவனுடைய மக்களோ பார்த்ததேயில்லை.



அந்த விலங்கை கண்ட விவசாயிகள் வேலையை விட்டு தோட்டத்திலிருந்து ஓடி வந்தார்கள். அரண்மனை வேலையாட்களும் ஓடி வந்துவிட்டார்கள். அந்த விலங்கை சுற்றி ஒரே கூச்சலாக இருந்தது.



சாவோ சாவோ வும் அங்கு வந்து சேர்ந்தான். அவனை கண்ட இந்தியர்களும், விவசாயிகளும் மற்றும் அரண்மனை வேலையாட்களும் மண்டி இட்டு வணங்கினார்கள்.

ராஜாவும் “இங்கு என்ன ஒரு அமர்க்களம்? இந்த விலங்கு என் நாட்டில் என்ன செய்து கொண்டிருக்கிறது?” என்று இந்திய தூதர்களை பார்த்து கேட்டான்?. “இதை ராஜாதி ராஜனாகிய உங்களுக்கு பரிசாக எங்கள் இளவரசர் அனுப்பியிருக்கிறார் என்று கூறினார்கள்” தூதர்கள்.

“ஆமாம் ஆமாம்” என்று முனகினான் ராஜா (ஒவ்வொரு ஆண்டும் இதே நேரத்தில் தான் இளவரசன் பரிசுகள் அனுப்பி வைப்பான் என்பது அவனுக்கு நினைவுக்கு வந்தது).

“மகிழ்ச்சி!” என்றான் சாவோ சாவோ
“இந்த பரிசை எனக்கு அனுப்பி வைத்த இளவரசனிடம் ரொம்ப மகிழ்ச்சியானேன்” என்று கூறுங்கள் என்றான் ராஜா. “ஆமாம் இந்த விலங்கின் பெயர் என்ன?” என்றான்.
ஜுன்மா எனும் தூதுவன் இதன் பெயர் “யானை” என்று ராஜாவிடம் சொன்னான். அதன் வெள்ளை தந்தத்தை ராஜாவின் மகன் பெய் யிடம் காட்டினான். பெய்யும் ஜுன்மாவிடம் ஒரு சீன பாய்ப்படகை காட்டினான்.

“இந்த யானை எவ்வளவு உயரம்?” என்று கேட்டான் சாவோ சாவோ
“பத்து அடி உயரம்” ராஜாதி ராஜாவே என்றான் ஜுன்மா
“எவ்வளவு எடை?” என்று கேட்டான் ராஜா
“அது எங்களுக்கு தெரியாது ராஜா. அதை எடை போடுவதற்கு எங்களிடம் ஒரு கருவியும் இல்லை” என்றான் தூதுவன்.
“என்ன சொல்றீங்க உங்கள் மகாராஜாவிற்கு இந்த யானையின் எடை தெரியாதா ?” என்று கேட்டான் ராஜா.
“ஆமாம் அது தான் உண்மை ” ராஜாதி ராஜாவே!

“அப்படியா” என்றான் ஆச்சரியமாக சாவோ சாவோ
இந்திய தூதுவர்கள் இளைபாருவதற்கு அரண்மனைக்கு அழைத்து செல்லப்பட்ட பின் அவனுடைய ஆலோசகர்களை அழைத்தான்.

“இந்த மாத கடைசியில் இந்திய தூதுவர்கள் திரும்பி செல்வார்கள் அதற்கு முன் இந்த யானையின் எடை எனக்கு தெரிந்தே ஆக வேண்டும்.



“இந்திய மகாராஜாவிற்கு தெரியவில்லை
என்றால் என்ன இந்த
லோயாங்கின்  ராஜாதி ராஜா சொல்லி
தருகிறேன்!”  என்றான்.



ஆலோசகர்கள் எல்லோரும்
எப்படி இந்த யானையை எடை போடுவது ?
எப்படி இந்த யானையை எடை போடுவது ?
என்றே யோசித்து கொண்டிருந்தனர். ஆனால் ஒருவருக்கும் பிடிபடவே இல்லை.

தூதுவர்கள் திரும்பி செல்ல ஒரு வாரமே இருப்பதற்கு முன் குட்டி பையன் பெய் அந்த அழகான யானையை பார்க்க வந்தான்.

“அந்த யானையின் கீழ்  உட்கார்ந்து கொண்டு என்ன செய்கிறீர்கள்?” என்று கேட்டான் ராஜாவின் ஆலோசகர்களிடம்.

“ஷ்... ஷ்...” நாங்கள் யோசித்து
கொண்டிருக்கிறோம்
“எதை பற்றி?” என்றான் பெய்
“யானையை எப்படி இடை போடுவதென்று?”
என்று குசுகுசுவென இரகசியமாக
பேசிக்கொண்டனர்
“அது ஒன்னும் பெரிய விஷயம் இல்லையே”
என்றான் பெய்
“ஒன்னும் பெரிய விஷயம் இல்லையா” என்று
எல்லோரும் கத்தினார்கள்.



“இல்லை” என்றான் பெய். “என் பின்னாடி எல்லோரும் வாங்க. நான் செய்து காட்டுகிறேன்” என்றான்
பெய் அவர்களை காட்டிற்குள் அழைத்து சென்றான். அங்கு ஒரு சிறிய குளத்தில் அவனுடைய பொம்மை பாய்மர படகு நின்று கொண்டிருந்தது. அது சாதாரணமான பொம்மை படகு போல இருந்தாலும் அதன் பக்கவாட்டில் ஒரு வித்தியாசமான கோடு ஒன்று கிழிக்கபட்டு இருந்தது.

“இங்கே காத்திருங்கள்” என்று அவர்களிடம் கூறி விட்டு வேகமாக அரண்மனையை நோக்கி ஓடினான்.
அந்த ஆலோசகர்கள் அந்த பொம்மை படகை உற்று பார்த்து கொண்டிருந்தார்கள். அதன் ஒரு பக்கத்தில் ஒரு கோடு வரைய பட்டிருந்ததை பார்த்தார்கள். அதன் பக்கத்தில் யானையின் குறியீடாக சீன எழுத்து ஒன்று எழுதப்பட்டிருந்தது.
அதற்கு என்ன அர்த்தம் என்று யோசித்து கொண்டிருந்தார்கள்
ஒன்றும் புரியவில்லை என்று மண்டையை ஆட்டி கொண்டிருந்தார்கள்.
பெய்யும் அரண்மனையிலிருந்து ஜுன்மா வின் ஒரு பொம்மை யானையை எடுத்து வந்திருந்தான்.
“எல்லோரும் வாங்க வாங்க” என்று படகின் அருகில் அழைத்தான்.
அந்த பொம்மை யானையை எடுத்து பொம்மை படகின் மீது வைத்தான். அந்த படகு வரைந்திருந்த கோடு வரை மூழ்கியது.

“பார்த்தீர்களா” என்று கூறி அவர்களுக்கு விளக்கினான்.
“எவ்வளவு முறை நான் இந்த யானையை கப்பலில் நிறுத்தினாலும் அது இந்த கோடு வரைக்கும் படகை மூழ்க வைக்கிறது. அதனால் தான் இந்த யானையை வரைந்து வைத்திருக்கிறேன். இதே போல் நிஜ யானையின் எடையையும் நீங்கள் கணித்து விடலாம்” என்றான்

“துல்லியமான எடை தெரிய வேண்டும் என்றால் யானையின் எடைக்கு ஈடாக கற்களை படகில் கோடு வரைக்கும் நிரப்பியும் கண்டுபிடிக்கலாம்” என்றான் பெய்.
புரிந்து விட்டது! புரிந்து விட்டது! என்று எல்லோரும் குதித்தார்கள்
குட்டி பெய் நமக்கு வழி காட்டி விட்டான் என்று சந்தோஷமடைந்தனர்.



நிஜ யானையை எடை போடும் நாளன்று விவசாயிகள், அரண்மனையில் வேலை செய்பவர்கள் என ஒரு பெருங்க்கூட்டம் அரண்மனையின் ஏரியின் அருகில் வந்து சேர்ந்துவிட்டது.

யானையை ஒரு வலுவான தக்கை படகில் எடுத்து வந்தார்கள். குட்டி பெய்யும் ராஜாவின் ஆலோசகர்களும் ஒரு சிறிய படகில் ஏறி கொண்டார்கள்.



யானையின் எடையினால் படகு மூழ்கியது. அதனை ஒரு கோடு வரைந்து குறித்து கொண்டார்கள். குட்டி பெய்யை அந்த படகில் கோட்டின் நேராக ஒரு யானையை வரைய செய்தார்கள். இரண்டு படகையும் அருகில் கொண்டுவந்த பின் அந்த தக்கை படகில் கற்களை மூழ்கும் வரை நிறைத்தார்கள். படகு மற்ற படகில் வரைந்த யானைபடம் வரை மூழ்கடிக்க பட்டது.

யானையின் எடை என்னவாக இருந்தது என்று யூகிக்க முடிகிறதா?

எட்டாயிரம் கற்களுக்கு ஈடாக யானையின் எடை இருந்தது.

கோவிலின் மணி  அடிக்கபட்டு மொத்த ஊருக்கும் தெரிவிக்க பட்டது.

ராஜாதி ராஜாவுடைய யானையின் எடை எட்டாயிரம் கற்கள் என்று அறிவிக்கப்பட்டது.
விவசாயிகள் மற்றும் அரண்மனை வேலையாட்கள் எல்லோரும் கைதட்டி ஆர்பரித்தார்கள்.

மீண்டும் மணி அடிக்கப்பட்டது. இந்த முறை பத்தாயிரம் படைகளை கொண்ட ராஜாதி ராஜாவே மக்களிடம் பேசினான்.
“இந்த யானையின் எடையை எப்படி எடுப்பது என்று கண்டுபிடித்தது வேறு யாரும் இல்லை நம் இளவரசன் பெய் தான்” என்று அறிவித்தான்.
மக்கள் எல்லோரும் உற்சாகமாக கை தட்டினார்கள்.
“இந்த கண்டுபிடிப்பை நம் சபை பதிவேட்டில் பதிவு செய்து இந்திய இளவரசனுக்கும் அனுப்பி வைக்கவும்” என்றான் ராஜா
பெய் யானையின் இடையை எப்படி அளந்தான் என்று விளக்கமாக பதிவு செய்யப்பட்டது. பின்னர் இந்திய இளவரசனுக்கும் அங்கு வந்துள்ள தூதுவர்கள் மூலம் அனுப்பி வைக்கப்பட்டது.
அந்த நாள் முதல் சீனாவின் ராஜாதி ராஜா தன்னுடைய அழகிய அரண்மனைக்கு மட்டும் இல்லை தன்னுடைய புத்திசாலி மகன் பெய்யினாலும்  உலகம் முழுவதும் பெருமையாக பேசப்பட்டான்.

பிற்காலத்தில் அதே  குட்டி பையன் பெய் சீனாவின் ராஜாதி ராஜாவாக முழு சீனாவையும் ஆண்டான். இந்த நிகழ்ச்சி 200 கி.பியில்   இரண்டாயிரம் ஆண்டுக்கு முன்னர் நடந்த நிகழ்ச்சியாகும்.

